Bibliographic Record Target

*திருப்புகழமிர்தம். -- மலர் 1, இதழ் 1 (Apr. 1936)- . --*
*சென்னை : திருப்புகழமிர்தம் ஆபீஸ், 1936-*
*v., plates ; 21-22 cm.*
*Monthly.*
*In Tamil.*
*Editor: கிருபானந்தவாரி*
*Record No. 166*

*Tiruppukaḻamirtam. -- Malar 1, itaḻ 1 (Apr. 1936)- . --*
*Ceṉṉai : Tiruppukaḻamirtam Āpīs, 1936-*
*v., plates ; 21-22 cm.*
*Monthly.*
*In Tamil.*
*Editor: Kirupāṉantavāri*
*Record No. 166*

# List of issues filmed

## திருப்புகழமிர்தம்

மலர் 7, இதழ் 1 (Apr. 1942)
மலர் 7, இதழ் 2 (May 1942)
மலர் 7, இதழ் 3 (June 1942)
மலர் 7, இதழ் 4 (July 1942)
மலர் 7, இதழ் 5 (Aug. 1942)
மலர் 7, இதழ் 6 (Sept. 1942)
மலர் 7, இதழ் 7 (Oct. 1942)
மலர் 7, இதழ் 8 (Nov. 1942)
மலர் 7, இதழ் 9 (Dec. 1942)
மலர் 7, இதழ் 10 (Jan. 1943)
மலர் 7, இதழ் 11 (Feb. 1943)
மலர் 7, இதழ் 12 (Mar. 1943)




உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற சொற்றவன் றுள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| மலா 7. Vol 7. | சித்திரபானு ஹு சித்திரைமீ 1௳ ஏப்ரல் 1942 | இதழ் 1. No. 1. |
|---|---|---|

## திருப்புகழ்.

### திருத்தணிகை

ஏது புத்திஜ யாள னக்கினி
யாரை நத்திடு வேன வத்தினி
லேயி றத்தல்கோ லோள னக்குநி தந்தைதாயேன்
றேயி நக்கவு நானு மிப்படி
யேத வித்திட வோச கத்தவ
ரேச லிற்பட வோந கைத்தவர் கண்கள்காணப்
பாதம் வைத்திடை யாத ரித்தெனே
தாளில் வைக்கநி யேம றுத்திடில்
பார்ந கைக்குமை யாத கப்பன்முன் மைந்தனேடிப்
பால்மோ ழிக்குர லோல மிட்டிடில்
யாரே டுப்பதே னுவே றுத்தழ
பார்வி டுப்பர்க ளோள னக்கிது சிந்தியாதோ
ஓத முற்றெழ பால்கோ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
ஓட வெட்டிய பாநு சத்திகை எங்கள்கோவே
ஓதி மொய்ச்சடை யாட வுற்றமர்
மான்ம ழுக்கர மாட பொற்கழ
லோசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே



Library's copy lacks front wrapper

மாதி னைப்புன மீதி நுக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தம யூர அற்புத கந்தவேளே
மாரன் வெற்றிகொள் பூழ டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ்தி ருத்தணி மாம லைப்பதி தம்பிரானே.

## பதவுரை.

ஓதம் உற்று எழு - தண்ணீர்கலந்து எழுகின்ற, பால் கொதித்தது போல - பாலைக் காய்ச்சியவுடன் அது சீறிவிரைந்து கொதித்ததுபோல, எண்திசை - எட்டுத்திசைகளிலிருந்து போர் செய்யவந்த, நீச முட்டரை - இழிந்த அசுரர்களை, ஓட - இறந்து இயமபுரத்திற்குப்போக, வெட்டிய - கொன்ற, பானு சத்தி கை - சூரியப்ரகாசம் பொருந்திய வேலாயுதத்தைக் கரத்தில் தாங்கிய, எங்கள் கோவே - எங்களுடைய தலைவரே! ஓதம் மொய் - கங்கை பொருந்தி வாழ்கின்ற, சடை ஆட - சடாபாரம் அசைந்து ஆடவும், உற்று அமர் - பொருந்தி இருக்கின்ற, மான் மழு கரம் ஆட - மான்கரமும் மழுக்கரமும் அசைந்து ஆடவும், பொன் கழல் ஓசை பெற்றிடவே - பொன்னாலாகிய வீரக்கழல் இனிது ஒலிக்கவும், நடித்தவர் - ஆனந்தத் தாண்டவம் புரிபவராகிய சிவபெருமான், தந்த வாழ்வே - பெருவாழ்வே! மாதினை புன மீது இருக்கும் - பெருமை தங்கிய தினைப்புனத்தின் கண் உறைந்த, மை வாள் விழி - மையைத்தீட்டிய வாள் போன்ற கண்களையுடைய, குறமாதினை - வள்ளியம்மையாரை, திரு மார்பு அணைத்த - திருமார்பில் தழுவுகின்ற, 'மயூர - மயில் வாகனத்தை யுடையவரே! அற்புத - அற்புதமான செயல்களைச் செய்பவரே! கந்த - கந்தக் கடவுளே! வேளே - எல்லோராலும் விரும்பப்படுகின்றவரே! பூ முடி குழலார் - மலர்சூடுகின்ற பெண்கள் தங்கள் அழகினால் மோகமூட்டியும் அதனால் மயங்காமல், நீடு - தவத்தினால் நீடித்து, மாறன் வெற்றிகொள் - மன்மதனை வெற்றிகொண்ட, மெய்தவர் வாழ் - உண்மைத் தவசீலர்கள் வாழ்கின்ற, திருத்தணி மா மலைப்பதி - பெருமை பொருந்திய திருத்தணி மலையில் வாழ்கின்ற, தம்பிரானே - தலைவரே! ஐயா - ஐயனே! எனக்கு ஏதுபுத்தி - அடியேனுக்கு என்ன புத்தி கூறுகின்றீர்?(தாங்கள் என்னை யாட்கொள்ள வில்லையானால்) இனி யாரை



நத்திடுவேன் - இனி யாரைப் பற்றுக்கோடாகக் கொள்வேன் அவத்தினிலே இறத்தல் கொலோ - பிறவிப் பயனைப் பெறுமல் வீணே இறந்துவிடுவது தகுதியோ? நீ எனக்கு தந்தை தாய் என்றே இருக்கவும் - நீரே அடியேனுக்கு தந்தையும் தாயும் என்று இருக்கவும், நானும் இப்படியே தவித்திடவோ - அடியேனும் இப்படியே தவிக்கலாமோ? சகத்தவர் ஏசலில் படவோ - பூவுலகத்தவர் கூறும் பழிச்சொல்லுக்குள்ளாகலாமா? நகைத்தவர் கண்கள்காண - என்னைக்கண்டு முன்னே எள்ளிச் சிரித்தவர்களுடைய கண்கள் காணுமாறு, பாதம் வைத்து - தேவரீருடைய திருவடியை அடியேன் சென்னிமீது வைத்தருளி, இடை ஆதரித்து - நடுவில் அடியேனைக் காப்பாற்றி, என்னை தாளில் வைக்க - அடியேனை உமது திருவடியில் வைப்பதற்கு, நீயே மறுத்திடில் - தேவரீரே மறுத்துவிட்டால், பார் நகைக்கும் - உலகம் சிரிக்கும், ஐயா - ஐயனே! தகப்பன்முன் - பிதாவுக்கு முன்னே, மைந்தன் ஒடி - மகன் ஒடி, பால் மொழி குரல் ஓலம் இட்டிடில் - பால்மணம் மாருத இனிய குரல்கொண்டு "ஓ" என்று ஓலமிட்டால், யார் எடுப்பது என - 'இக்குழந்தையை யார் எடுப்பது" என்று, வெறுத்து அழ - வெறுப்புற்று அழுமாறு, பார் விடுப்பர்களோ - உலகத்திலே யுள்ளவர் விட்டுவிடுவார்களோ? (விடமாட்டார்கள்) எனக்கு இது சிந்தியாதோ - அடியேன் விஷயத்தில் இந்த நியாயத்தைத் தேவரீருடைய திருவுள்ளம் நினைத்தருளாதோ?

## பொழிப்புரை.

தண்ணீரோடுகூடிய பாலை வற்றக் காய்ச்சும்போது அப்பால் எப்படி கொதித்தெழுமோ அப்படி எட்டுத் திசைகளிலுமிருந்து சீறி வந்த இராக்கதர்களை உயிர் எமபுறம் ஓட வெட்டிக்கொன்ற சூரியப் பிரகாசமுடைய வேற்படையை கரத்தில் ஏந்தியவரே! எங்கள் தலைவரே! கங்கை வாழ்கின்ற சடாபாரம் ஆடவும் பொருந்தியுள்ள மான் மழுக்கரங்கள் ஆடவும் பொன்னாலாகிய வீரக்கழல் இனிது ஒலிக்கவும் அநவரத ஆனந்தத் தாண்டவம் புரியும் சிவபெருமான் பெற்றருளிய பெருவாழ்வே! பெருமை பொருந்திய தினைப்புனத்தில் வாழ்ந்த மையெழுதிய வாள் போன்ற திருக்கண்களையுடைய வள்ளிநாயகியாரை திரு

மார்பில் தழுவுகின்ற மயில்வாகனரே! அற்புதமான செயல்களையுடையவரே! கந்தப்பெருமானே! எல்லோராலும் விரும்பப்பட்டவரே! மலரை முடித்துள்ள மாதர்கள் தமது அழகால் மயங்காததைக் கண்டு வியப்புறுமாறு மன்மதனை வென்று நீண்ட தவஞ்செய்யும் மாதவர்கள் வாழும் திருத்தணிகை மலைமேல் எழுந்தருளியுள்ள தலைவரே! அடியேனுக்கு என்னபுத்தி கூறுகின்றீர்? ஐயனே! இனி அடியேன் உம்மையன்றி யாரை அண்டி உய்வு பெறுவேன்; பயனின்றி வீணிலே இறந்துபடுவது தக்கதோ? அடியேனுக்குத் தந்தையும் தாயும் நீரே என்று எண்ணியிருக்க, அடியேன் இப்படி அலைந்து கெடலாமோ? அடியேன் உலகத்தவரால் பழிக்கப்படலாமோ? என்னைக் கண்டு நகைத்தவர்கள் கண்கள்காணுமாறு உமது பாத தாமரையை என் சென்னிமீது வைத்தருளி என்னைக்காப்பாற்றி திருவடியிற் சேர்க்க தேவரீரே மறுத்துவிட்டால் உலகம் கண்டு (என்னையும் உன்னையும்) நகைக்காதோ? ஒரு குழந்தை பிதாவின் முன் சென்று பால்மணமாறாத இளங்குரல்கொண்டு அழுதால் யாராவது எடுக்கட்டுமென்று உலகில் அழ விட்டு விடுவார்களோ? ஒருபோதும் விடமாட்டார்கள். இந்த நியாயம் அடியேன் விஷயமாகத் தாங்கள் திருவுளத்தில் நினைப்புக்கு வராதோ?

## விரிவுரை.

இப்பாடல் அருமையினும் அருமையானது. ஒரு மகன் தன் அருமைத் தந்தையிடம் தன் குறைகளைக் கூறி முறையிட்டு வாதாடுகின்ற முறையில் அமைந்துளது. இப்பாடலை நினைக்குந்தோறும் நெஞ்சமாகிய கல் நெகிழ்ந்து உருகுகின்றது; பாடக் கேட்டவர் ஊனும் உணர்வும் உள்ளமும் உயிரும் ஒருங்கே உருகுகின்றன. அன்பர்கள் சற்று ஊன்றிப் படிப்பார்களாக. இதன் அருமைப்பாடும் இதிலுள்ள அன்புநெறியும் நன்குவிளங்கும். முருகபக்தர்கள் நாள்தோறும் இத்திருப்பாடலைச் சொல்லி முறையிடவேண்டும்.



**ஏது புத்தி ஐயா:—**

பிள்ளைகள் பிதாவிடத்தில் போய் எனக்கு என்ன புத்தி ஐயா! என்று அன்பு கனியக் கேட்பது போல் சுவாமிகள் தமது பரம பிதாவாகிய கந்தப் பெருமானை நோக்கி "ஐயனே! அடியேனுக்கு என்ன புத்தி கூறுகின்றீர்?" என்று கேட்கின்றார். இந்த ஒரு சொற்றொடரே கல் மனதைக் கரையச் செய்கின்றது.

**இனி யாரை நத்திடுவேன்:—**

"முருகா! இதுகாறும் உம்மையே கதியென்று எண்ணி, பிற தெய்வங்களை கனவிலும் நினையாதிருந்த அடியேனை நீர் கைநெகிழ விட்டுவிட்டால் இனி யாரை அண்டி உய்வு பெறுவேன்" என்கின்றார்.

**அவத்தினிலே இறத்தல்கொலோ:—**

பெறுதற்கரிய மனிதப் பிறப்பை எடுத்து ஒவ்வொருவரும் இப்பிறவியின் பயனைப் பெறுதற்கு விரைந்து முயற்சிக்க வேண்டும். அப்பயனாவது இனிப் பிறவாமையேயாம். பிறவா பெற்றியைப் பெறுமல்வறிதே வாழ்நாளைக் கழித்து அவமே இறந்தொழிவது கூடாது என்று சுவாமிகள் இதனால் விளக்குகின்றனர்.

**எனக்கு நீ தந்தை தாயென்றே இருக்கவும்:—**

இறைவனைத் தாய் தந்தையாகப் பாவித்து அன்பு செய்வது சற்புத்ர மார்க்கம் எனப்படும்.

> "எந்தாயு மெனக் கருள்தந் தையுநீ
> சிந்தாகுலமா னவைதீர்த் தெனையாள்" —அநுபூதி

**சகத்தவரேசலிற்படவோ:—**

"முருகா! உமது திருவடியே கதியென்று இருந்த அடியேனை நீர் ஆட்கொள்ளவில்லையானால், 'அருணகிரி ஓயாமல் முருகா! முருகா!! என்று பாடினான்: முடிவில் அருள் பெறுதொழிந்தான்;' என்று உலகத்தவர் ஏசுவார்களே? அந்தப் பழிச்சொல்லுக்கு அடியேன் இலக்காகலாமோ?" என்று சுவாமிகள் நம்மை உருக வைக்கின்றனர்.

**நகைத்தவர் கண்கள்காண பாதம் வைத்திடு:—**

அருணகிரிநாதசுவாமிகள் அடியார் குழாங்களோடும் விபூதி உருத்திராக்கச் சின்னங்களுடனும் அரகர முழக்கத்துடனும் திருப்புகழைப் பாடிக்கொண்டு தணிகை மலைக்குச் சென்றனர். அங்கு சில கீழ்மக்கள் சுவாமிகளைக் கண்டு எள்ளி நகையாடினார்கள். அதுகேட்ட சுவாமிகள் "சினத்தவர் முடிக்கும்" என்ற திருப்புகழின் முதலிரண்டடியைப்பாடி அவர்களை நீறாக்கிப் பின் மனமிரங்கி பின் இரண்டடியைப் பாடி உய்வித்தனர். அவர்கள் உடனே திருந்தி சுவாமிகள் திருவடியிற் சரண்புகுந்து அடிமைகளாயினர். அவர்கள் முந்தி நகைத்தார்களாதலால் நகைத்த அவர்கள் கண்கள் காண திருவடியைச் சென்னி மிசை வைத்து ஆதரிக்குமாறு வேண்டுகின்றனர்.

**மறுத்திடில் பார் நகைக்குமையா:—**

"முருகா! உம்மையொழிய ஒருவரையும் நம்புகிலா நாயேனை நீர் ஆட்கொள்ள மறுத்துவிட்டால், 'கருணைக் கடவுள் என்று வேதாகமங்கள் கந்தவேளைப் புகழ்வது அத்தனையும் பொய்; அருணகிரி பலகாலும் தொழுது அழுது வழிபட்டும் அறுமுகன் ஆட்கொள்ளவில்லை; ஆதலால் அறுமுகனை வழிபடுதல் வீண்செயல்' என்று தேவரீரையும், 'அருணகிரி இத்தனைகாலம் வீணான முயற்சி செய்து முருகா முருகா என்று எய்த் தொழிந்தனன்' என்று என்னையும் உன்னையும் உலகம் பழிக்கும்" என்று சிறிது சுவாமியைப் பேதிக்கின்றார்.

"ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மானமுன தென்றுமோதும்
ஏழைகள்வி யாகுலமி தேதெனவி னாவிலுனை
ஏவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ
—திருப்புகழ்

**தகப்பன்முன் மைந்தனோடி..........சிந்தியாதோ:**

"ஒரு சிறு குழவி பிதாவின் முன்னரோடி பவளவாய் துடிக்க கண்ணீர்வடிக்க கரமலரால் கண்மலரைப்

பிசைந்து இளங்குரலால் அழுதால் எந்தவன்னெஞ்சுடைப் பிதா எடுத்து அணைத்து ஆதரிக்காமல் இருப்பன்? யாரும் உடனே எடுத்து கண்ணீரைத் துடைத்து இன்னுரைகூறி இனிது அணைத்து குழந்தையின் துன்பத்தை யாற்றுவர்; அடியேனுக்குப் பரமதந்தையாக விளங்கும் உமது முன்னேவந்து என்குறைகளைக்கூறி இப்படி முறையிட்டு நிற்கும் என்னை ஆதரித்தற்கு மேற்கூறிய உலக வழக்கு உமது திருவுளத்தில் சற்று சிந்திக்கலாகாதோ?" என்று கூறும் சமத்காரம் சிந்திக்குந்தோறும் சித்தத்தில் தித்திக்கின்றது.

பானு சத்தி:—

நூறு கோடிசூரியர்கள் ஒருங்கே உதித்தால் எத்துணை ஒளியை வீசுமோ அத்துணை ஒளியை வீசும் எந்தையார் திருக்கைவேல்.

"உலாஉதயபானு சதகோடி யுருவான
வொளியாகு மயில் வேலங் கையிலோனே
—திருப்புகழ்

"சுடர்ப்பரிதி யொளிப்பநில வொழுக்குமதி யொளிப்பவலை
அடக்குதழ லொளிப்ப ஒளி ரொளிப்பிரபை வீசும்"
—வகுப்பு

மாறன் வெற்றிகோள்..... ....மெய்த்தவர்:—

திருத்தணிகைமலை உண்மைத்தவசிகள் பலர்க்கு உறைவிடமாக விளங்குகின்றது. அங்கு வாழும் மாதவர்கள் மதனனை வென்றவர்கள். ஊர்வசி திலோத்தமையைப் போன்ற மகளிர் தமது ஒப்பற்ற அழகைக்கண்டு அத்தவசிகள் சிறிதுங் கலங்காமையைக்கண்டு "அம்மா! இது போன்ற உறுதியுடையவர்களைக் கண்டதேயில்லை" என்று வியப்புறுகின்றனர். இத்தகைய மெய்த்தவர் பலர் வாழ, எம்பிரான் அம்மலையில் வாழ்கின்றனன்.

## கருத்துரை.

நிருதரைமாய்த்த நெடுவேலண்ணலே! நிருத்த மூர்த்தியின் திருக்குமாரரே! வள்ளிகணவரே! தணிகையாண்டவரே! தந்தையாகிய நீர் குழந்தையாகிய என்னை ஆதரித்து ஆட்கோள்வீர்.

## திருப்புகழ் ஸ்வரம்

### இராகம் நாட்டை. திரிபுடை தாளம்.

(36-வது மேளம்) ஆ. ஸரிகமபதநிஸ. அ. ஸநிப மரிஸ.

| | | |
|---|---|---|
| க ம பா ப ப | ப நி ப ம | பா ப ப |
| க ன கந் தி ரன் | குன் . ற பெ | ருங் கி ரி |
| க ம ப ஸ் ஸ் ஸ் | நீ ஸ் நி | நி ப ப ம |
| த லில் வ ந் . து த | கன் த க | னென் . றி டு |
| க ம ப ஸ் ஸ் ஸ் | நீ ஸ் நி | நி ப ப ம |
| க திர் மிஞ் . சி ய | செண் டை யெ | றிந் . தி டு |
| க ம பா பா | பா,நி ஸ் நி | ப ம மா |
| க . தி யோ | னே . . . | . . . |

### இராகம் இந்தோளம். ஆதி தாளம்.

(20-வது மேளம்) ஆ. ஸமகம தநிஸ. அ. ஸநித மகஸ

| | | |
|---|---|---|
| கா , ஸ ஸநி நி நி | ஸ கா க | மா ம ம |
| ஏ து ப . த்தி ஐ | யா . எ | ன க்கி னி |
| க ம க ம தா நி நி | ஸா , க் | ஸ் நி ஸ் ஸ் |
| யா . . ரை ந த்தி டு | வே ன | வ . த்தி னி |
| ஸ் க்ா ம் க் ஸ் நி த | தநிஸா , நிஸ | தா ம ம |
| வே . யி ற . த்தல் கொ | லோ.. யெ. | ன க்கு நி |
| க ம க ஸா , ஸமகம | மா , , | , , , , |
| தந் தை தா . ... | ... | ... |
| க ம க ம தா ம க கா | ஸா , , | , , , , |
| ... ... | யென் | |

உ

ஓம் குஹாய நம:

# கந்தரலங்காரம்

(மலர் 6 264-ம் பக்கத் தொடர்ச்சி)

(38) நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங் குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

பதவுரை

குமர ஈசர் - குமாரக் கடவுளுடைய, இருதாளும் - இரண்டு திருவடிகளும், சிலம்பும் - சிலம்புகளும், சதங்கையும் - சதங்கைகளும், தண்டையும் - தண்டைகளும், சண்முகமும் - ஆறுதிருமுகங்களும்; கடம்பும் - கடப்ப மலர் மாலையும், எனக்கு - அடியேனுக்கு, முன்னேவந்து - எதிரில் வந்தருளி, தோன்றிடின் - தோன்றுமானால், நாள் என் செயும் - கொடிய திதிநட்சத்திரங்கூடிய நாள்கள் அடியேனை என்ன செய்யக்கூடும்? வினைதான் என் செயும் - தீவினைதான் என்ன செய்யக்கூடும்? எனை நாடி வந்த கோள் என் செயும் - அடியேனைத் துன்புறுத்துவதற்குத் தேடிவந்த நவக் கிரகங்கள்தான் என்ன செய்யக்கூடும்? கொடும் கூற்று என் செயும் - கொடிய இயமனுல்தான் என்ன செய்ய முடியும்?

விரிவுரை

நாளென் செயும்:— குமாரபரமேஸ்வரரைத் தெரிசித்த பக்த சீலர்களை நட்சத்திரம் திதி யோகம் முதலிய தீமை பயக்க நின்ற நாள்கள் ஒன்றும் செய்ய மாட்டாது வலியிழந்து நிற்கும்.

வினைதானென்செயும்:—

முருகபக்தர்கட்கு ஊழ்வினையும் தன் ஆற்றல் இழந்து வருத்தாது. வினையை யறுப்பது வேல்; "வினையோட விடுங்கதிர் வேல்" என்ற படியாலும், "தீவினையெலாமடிய நீடு தனி வேல் விடுமடங்கல் வேலா" என்றபடியாலும் விளங்குகின்றது. அத்தகைய வேலையுடைய விமலனை வணங்கும் மெய்யடியார்களை வினைத்துன்பம் சாராது என்பது ஒரு

தலை. வினையால் வெந்து வெதும்பும் ஒவ்வொருவரும் "கூறு மடியார்கள் வினை தீர்த்த நம் குமரனை வணங்கி வினையைத் தணித்துக் கொள்வார்களாக.

**எனை நாடிவந்த கோளேன் செயும்:—**

பண்டைப்பிறப்பில் செய்த வினைப்பயனால் துன்பஞ் செய்யும் பொருட்டு வந்த நவ கோள்களும் கந்தக் கடவு ளடியார்களிடம் தமது ஆற்றலைக்காட்டும் ஆற்றலற்று அடங்கிவிடும். இத்தன்மை கந்தரந்தாதியிலும் வருமாறு காண்க.

சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்த செந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்தவென்னில்
சேயவன் புந்தி பனிப்பானு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தமோற வேதருஞ் சேதமின்றே.

சிவந்த நிறத்துடன் அன்பை விளைவித்து கான்யாறு ஓடும் தினை வனத்தில் இருந்த வள்ளி யம்மையாருடன் சேர்ந்த செந்திற்பெருமானே! வலிமைமிக்க போரில் வல்ல அசுரர்களை யழித்தவரே! சேந்தரே! என்று துதிப்பவர்க்கு செவ்வாய் புதன் சந்திரன் சுக்கிரன் வியாழன் சூரியன் சனி இவைகள் அறிவைத்தடுமாற வைக்கும் துன்பம் ஒருபோ துமில்லை. ஞானசம்பந்தருடைய தேவாரத்தை இதனோடு வைத்து எண்ணி இன்புறுக.

வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன் மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தென்னுளமே புகுந்தவதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனிபாம்
[பிரண்டு முடனே
ஆசறுநல்லநல்ல வைநல்ல நல்ல வடியாரவர்க்கு மிகவே.

**கோடுங்கூற்றேன் செயும்:—**

இயமன் உயிரையும் உடம்பையும் கூறுபடுத்துவதால் கூற்றுவன் எனப்படுவன். மணமகளென்றும் இளைஞன் என்றும் ஒருகுலத்திற்கு ஒரு மைந்தனென்றும் பாராது கருணையின்றி உயிரைக் கவர்பவனுதலால் கொடுங் கூற்றெ ன்றார். குமரேசரை வணங்குவோர்க்கு எமபயமில்லை. சுவா மிகள் பிறபாடல்களிலும் இயமனை எதிர்த்துவீறிட்டுமுழங்

குவளைத அடியிற்கண்ட அமுதப்பாக்களால் கண்டு மகிழ்க.

"சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாராதகல் அந்தகா வந்த போதுயிர் வாங்குவனே'

தண்டா யுதமுந் திரிசூலமும் விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன் செந்தில் வேலனுக்குத்
தொண்டாகிய வென் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டாயடாவந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

இருதாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும்:—

எந்தை கந்தவேள் இளம்பூரண ஞதலால் அவனுடைய திருவடியில் தண்டையும் சதங்கையும் சிலம்பும் எப்போதும் இடையருது மறையொலி போல் முழங்கிக் கொண்டிருக்கும்.

"இனிய நாத சிலம்பு புலம்பிட
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்"
"அநவர தமு மறை முறையிடு பரிபுரம்
அலங்கு மிருதாள் குலுங்க ஒருபால்"

வகுப்பு.

கருத்துரை:

குமாரக்கடவுளைத் தெரிசித்த மெய்யடியார்களை தாளும் கோளும் வினையும் வருத்தமாட்டாது. வலியழிந்தொழியும். அதனுல் "இன்பமே எந்நாளுந் துன்பமில்லை".

---

## எதுகைப் பழமொழிகள்.

(முன் தொடர்ச்சி)

36. பேரின்ப வுறவு பெறுவது துறவு.
37. மறக்கப் படுவான் பழிக்கப் படுவான்.
38. மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி.
39. மானம் பெரிது பிராணன் சிறிது.
40. முயற்சி யுடையான் இகழ்ச்சி யடையான்.
41. முன்மொழி வாக்கியம் முழுதும் சிலாக்கியம்.
42. மூர்த்தி சிறிது கீர்த்தி பெரிது.
43. மூத்தது மோழை இளையது காளை.
44. மெய்ம்மொழி யுயர்த்தும் பொய்ம்மொழி கவிழ்த்தும்.
45. வள்ளுவ ரடிகள் வான்வழிப் படிகள்
46. வாகை வேலை வணங்குதல் வேலை.

ஓம் குஹாய நம:

# சிவாநந்தலஹரீ

(ஆதிசங்கரர் அருளிச் செய்தது)

(மலர் 6 266-ம் பக்கத்தொடர்ச்சி)

(85) ஜலதி[4] மத[2]நத[3]க்ஷோ நைவ பாதாள பே[4]தீ[3]

நச வநம்ருக[3]யாயாம் நைவ லு[3]ப்த[3] ப்ரவீண: ।

அசநகுஸு[4]ம பூஷா வஸ்த்ர முக்[2]யாம் ஸபர்யாம்

கத[2]ய கத[2]மஹம் தே கல்பயாநீ[3]ந்து மௌளே ॥

பதவுரை.

| | |
|---|---|
| இந்து மௌளே | — சந்திரனைச் சூடியவரே! |
| அஹம் | — அடியேன் |
| ஜலதிமதநதக்ஷ: | — கடலைக்கடைவதில் வல்லவனும் |
| நைவ | — அல்லேன் |
| பாதாளபேதி | — பாதாள உலகத்தைப் பிளப்பதில் வல்லவனும் |
| நைவ | — அல்லேன் |
| வநம்ருகயாயாம் | — காடுகளில் வேட்டையாடுவதில் |
| ப்ரவீண: | — வல்லவனான |
| லுப்த: | — வேடனும் |
| நைவ | — அல்லேன் · இப்படி ஒருவகையிலும் வல்லமை [யற்ற அடியேன்] |
| தே | — உமக்கு |
| அசந குஸும பூஷா | |
| வஸ்த்ர முக்யாம் | — உணவு மலர் ஆபரணம் உடை [முதலியவைகளால் |
| ஸபர்யாம் | — பூஜையை |
| கதம | — எவ்விதம் |
| கல்பயாநி | — செய்வேன் |
| கதய | — சொல்லியருளும் |

பொழிப்புரை

சந்திர சேகரரே! உமக்கு உணவு மலர் அணிகலம் உடை ஆகியவற்றை முக்கியமாகக் கொண்டு வழிபாட்டை அடியேன் எவ்வாறு செய்வேன்; ஏனெனில், கடலைக்கடைந்தால் ஆலாலவிடத்தை உணவாகவும் சந்திரனை மலராகவும் செய்யலாம்; பாதாளத்தைப் பிளந்தால் பாம்புகளை அணிகலமாகச் செய்யலாம்; வனத்தில் வேட்டையாடினால் யானை புலித்தோலை உடையாகச் செய்யலாம்; இவையொன்றும் செய்ய வன்மையற்ற நாயேன் தேவரீரது பூஜையை எவ்வாறு செய்வதென்று ஏங்குகின்றேன்.

Bleed through.



ஓம் குஹாய நம:

# கந்தர் திருவிளையாடல்

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரியா னென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை.

பேரொளிப்பிழம்பாய் ஒளிர்வது திருக்கைலாயமலை. உள்ளுதற்கினியது அவ்வெள்ளிமலை அக்கயிலையில் வேதவொலையும் வீணையோசையும் விஞ்சையர் கீத ஓசையும் அடியார்கள் முழக்கும் அரஹர என்ற நாதவோசையும் தேவதுந்துபியும் ஒலித்த ஓசையும் நாண எப்போதும் இனிமையை விளைவித்துக்கொண்டிருக்கும். திருமால், நான்முகன் இந்திரன் முதலிய இமயவர், நாரதாதி இசைவாணர், இருடியர், அடியார் முதலியோர் சிவபெருமானுடைய சேவையைப்போது கிடைக்குமோ என்று எதிர் பார்த்து நிற்பர். அம்மாமலையில் வாயிலில் நந்தியெம்பெருமான் சுரிகையும் பொற்பிரம்புந்தாங்கிக் காவல்புரிவார். ஆயிரங்கோடி சந்திரர்கள் ஒருங்கு கூடினாற்போல் குளிர்ந்து தட்பத்தைத்தந்து பாவவெயிலால் வெதும்பியோர்க்கும் பரமசுகத்தை வழங்குவது அம்மலை.

இத்தகைய திருமலையின் உச்சியில் நவரத்தினமயத் திருக்கோயிலின் நடுவண் அரியாசனத்தில், எங்கள் இமயவரை பயந்த எம்பிராட்டி மரகதமலைபோல் இடப்பக்கத்தில் இனிது வீற்றிருப்ப, இமையாநாட்டத்து எந்தை அந்திவண்ணத்தமலன் பவளமலைபோல் இனிது வீற்றிருந்தருளுவார். அக்காட்சியை உளக்கண்ணால் உன்னும்போது ஊனும் உயிரும் உணர்வும் உள்ளமும் ஒருங்கே குளிர்கின்றன என்பு உருகுகின்றது, அன்பு பெருகுகின்றது; வினையருகுகின்றது

அம்மையப்பராகிய பார்வதிபரமேஸ்வரர் திருமுன் ஒரு கோட்டிருசெவி மும்மதத்து நால்வாய் ஐங்கரத்து ஆனைமுகப்பெருமானும், இளம்பூரணனும் தளர்நடை ஆறுமுகக் குழவியும் விளையாடிக் கொண்டிருந்தார்கள்

ஆனைமுகத் தண்ணல் ஆறுமுகத் தம்பியைத் தழுவியும், உச்சிமோந்தும் முதுகு தைவந்தும் உவந்தனர் ஆறுமுகக் குழந்தை அண்ணுவுடைய தும்பிக் கையைப் பிடித்து அசைத்தும்அவருடைய ஞானத்தொப்பையைத் தடவியும் விளையாடிற்று.

இவ்வாறு இனிது ஆடல்புரிகின்ற இருமக்களையும் சிவபெருமானும் சிவகாமசுந்தரியும் கண்டு கண்களித்து, அன்புடன் "குழந்தைகாள்! வருக" என்று அழைத்தருளினார்கள். உடனே விகடகணபதி தம்பியை நோக்கி, "தம்பி! நான் பெரியவனுதலால் நான்தான் முன்னே செல்வேன்" என்று கூறி மாதாபிதாக்களிடம் செல்ல நடந்தருளினார். முருகவேள் அண்ணலை நோக்கி,

"ஐங்கரத்தண்ணலே! நில்லும். எனக்கு ஆறுமுகம்; தங்கட்கு ஒருமுகம்; எனக்குப் பன்னிருகரங்கள்; தங்கட்கு ஐந்துகரங்கள். எனக்கு ஆறுவாய்; தங்கட்கு நாலவாய்; எனக்கு பதினெட்டுக் கண்கள்; தங்கட்கு மூன்றுகண்கள். ஆதலால் தாங்கள் முகத்திற் பெரியவரா? கரங்களிற் பெரியவரா? கண்களிற் பெரியவரா? வாயிற்பெரியவரா? கொஞ்சம் கோபிக்காமல் சொல்லும்" என்று கூறினார்.

**விநாயகர்:** என்ன நீ சொல்வது வேடிக்கையா யிருக்கின்றதே தம்பீ! நான் உன்னைவிட வயதிற் பெரியவன்.

**முருகர்:-** அண்ணு! தாங்கள் வயதில் மட்டுமா பெரியவர்? முக்கியமாக வயிற்றிலும் பெரியவர்தான். அதிருக்கட்டும்; உன் ஆசைக்குரிய தந்தையாருக்கு பிரணவ மந்திரத்தைஉபதேசித்த குருமூர்த்தி யார்?

**விநாயகர்:-** ஆறுமுகா! அப்பாவுக்குக் குருமூர்த்தியாக உபதேசித்தது நீதான்.

**முருகர்:-** அப்போது உன் பிதாவுக்கு குருநாதனுகிய நான் தானே பெரியவன் என்று கனிவாய் மடித்து ஆள் காட்டு விரலைக்காட்டி அசைத்து தலையையும் ஆட்டி, பார்வதியும் பரமசிவமும் விநாயகரும் உள்ளம் மகிழ முருகவேள் புன்னகை புரிந்தருளினார்.

**விநாயகர்:-** தம்பி! நீ பெரிய பேச்சுக்காரன். உன்னோடு பேச என்னால் முடியாதப்பா. நீதான் பெரியவன் நீயோ தகப்பன்சாமி. நீ அம்மா மடியில்ஏறுக. அப்பா மடியில் நான் ஏறுகிறேன், என்றார்.

ஓம் குஹாய நம :

# கற்பு.

தங்கம்மாளுக்கு இரண்டே குழந்தைகள்தான் பிறந்தன. மூத்தது ஆண்; இளையது பெண்; அவளுடைய அதிர்ஷ்டம் கணவன் இறந்துவிட்டான்! அதனால் அவளை அடக்குவாரில்லை. கணவன் இருக்கும்போதே அவள் ஒருவருக்கும் பயப்படாதவள். அவள் சொற்படிதான் கணவன் கேட்கவேண்டும். பின் அவன் இறந்த பின் கேட்பானேன், கன்றிருக்கும்போதே கறவாதபசு கன்றிறந்த பின்கறக்குமா? தங்கம்மாள் வைத்ததுதான்சட்டம், கணவன் சம்

---

கணநாதர் கண்ணுதற் கடவுள் மடியில் ஏறியிருந்தார் பன்னிருபுயப் பச்சிளங்குழவி பனிவரை பயந்த பச்சைப் பசுங் கொடியின் மடிமேல் ஏறி ஆடிக்கொண்டிருந்தது.

பனிமா மலைக்கரசு தந்தவுமை யம்மையும்
பரமனும் விரும்பி நோக்கிப்
பரிவின் மக் காள்வருக வென்றவும் விகடகண
பதி பெரியன் நான் ஆதலால்
கனியாசை கொண்டு செல்வன் செல்வன் முன்னென
நடக்க அண்ணனது சொல்
நன்று நீ பெரியன் வதனத்தினே கையினே
நயனத்தினே வாயினே
முனியாது கூறுகென ஆறுமுக வயதினே
மொழிவதென் னெனவுயிற்று
முக்கியம் பெரியனுன் தந்தைக்கு முபதேசம்
மொழி ராய குருயாரெனக்
கனிவாய துக்கி மூ வகுமகிழ இளநகை செய்
கந்தநா யகன் வருகவே
கந்த மலர் நந்தவண சுந்தர மிகுந்த கன
கம்பை வாழ் குகன் வருகவே.

பாதித்தசொத்து சிறிது இருந்தது. நன்செய் ஏக்கர்8-ம் ரொக்கத்தில் 5000 ரூபாயும் இருந்தது. கணவன் இறந்தவுடன் இன்ஷூரன்சில் ஒரு 5000 ரூபாய் கிடைத்தது. ஆக பதினாயிரம் ரூபாய் அவள் கையில் இருந்தது. நிலத்தில் தேவைக்கு மிச்சமாகவே நெல் கிடைத்தது.

பிதா இறக்கும்போது பையனுக்கு வயது 7. மகளுக்கு வயது 3. பையன் பெயர் தாணுமாலயன்; மகள் பெயர் கோமதி. தங்கம்மாள் ஒரு பெரிய அகங்கார பிண்டம், தனக்கு சமானம் ஒருவருமில்லை என்று எண்ணுபவள். அவள் வாயைத் திறந்தால் கடலோசையடங்கும்; சிறிது பேசத் தொடங்கினால் நட்சத்திரங்கள் உதிரும். 4 ஆண்கள் சேர்ந்து நடப்பதுபோல் பெருமிதமாக நடப்பாள். எப்படியோ அவள் கணவன் அவளிடமிருந்து தப்பித்துக்கொண்டு விண்ணுலகம் புகுந்தான் பிதாவைப்போல் தாணுமாலயன் நல்ல அடக்கமும் அமைதியும் உடையவன்; சாந்தசீலன்; கெட்டியாகப் பேசமாட்டான். தாயார் சிறிது அதட்டினால் அவனுக்கு காய்ச்சல் வந்துவிடும். அவ்வளவு பயந்த சுபாவமுடையவன். ஒழுங்காகப் படித்து வருடந்தோறும் மேல்வகுப்புக்கும் போய்க்கொண்டிருந்தான். பள்ளிக்கூடம் வீடு இந்த இரண்டிடந் தவிர வேறு எங்கும் போகமாட்டான். பி. ஏ. பட்டம் பெற்று அறிவில் மிக்கவனானான். அவனுடைய தங்கை கோமதி தாயாரைப்போல் தலையரட்டலும் தற்பெருமையும் பெரிய குரலும் உடையவள். தங்கம்மாளுக்கு தனது துர்க்குணங்களைப் படம் பிடித்ததுபோல் உள்ள மகளிடம் அளவு கடந்த அன்பு இருந்தது. அமைதியே வடிவமான மகனைக் கண்டால் அவளுக்கு அவனுளவும் பிடிக்காது, மகன் உணவுக்கு வரும்போதெல்லாம் எரிந்து எரிந்து விழுவாள். கடிக்காத குறை ஒன்றுதான். வேண்டா வெறுப்பாக சிறிது அன்னத்தைப் போட்டு நெய்க் கிண்ணத்தில் தண்ணீரைவிட்டு நெய் என்று விடுவாள். அவன் பாவம் ஒன்றும் வாய்த் திறவாமல் போட்டதைத் தின்று விட்டுப் படிக்கப் போய்விடுவான். கோமதி உணவுக்கு வந்தால் தங்கம்மாள் நெய்யைக் கிண்ணத்தோடு சாய்ப்பாள். கோமதி எவ்வளவு தின்றாலும் அவளுக்குத் தின்றதாகத் தோன்றாது. "ஐயோ! என்மகள் சாப்பிடுகிறதே இல்லை." என்று அடிக்கடி சொல்லிக்கொள்வாள்.

கோமதி மங்கைப் பருவத்தையடைந்தாள். அடுத்த ஊரில் ஒரு மாப்பிள்ளையைத் தேடி தங்கம்மாள் மகளுக்கு விவாகத்தைச்



சீரும் சிறப்புமாகச் செய்து முடித்தாள். மாப்பிள்ளையைத் தன் வீட்டிலேயே இருத்தி மருமகனையும் மகளையும் மிகவும் பட்சமாக கவனித்து வந்தாள். மருமகன் வந்தபின் தாணுமாலயனுக்கு சிறிது கூட கவனிப்பு இல்லாமற் போய்விட்டது. தானும் அந்த ஊர் கலக்டர் ஆபீசில் ஒரு சிறந்த வேலையில் அமர்ந்தான், பெரும்பாலும் அவன் ஆபீசிலும் நண்பர்கள் வீட்டிலும் தனது நேரத்தைக் கழித்து வந்தான். வீட்டில் கோமதியும் அவள் கணவனும் உல்லாசமாக இருந்து மகிழ்ந்தார்கள். தங்கம்மாளுக்கு அது விஷயத்தில் மிக மகிழ்ச்சி.

தங்கம்மாளுக்கு மகனுக்கு விவாகஞ் செய்வதில் சிறிதும் முயற்சியில்லை. தாணுமாலயனுடைய நற்குணங்களை நன்கறிந்த ஒரு தனவந்தர் தானே வலிதில் தனது மகளை 5000-ரூபாய் நகையுடன் கன்னிகாதானம் செய்துக் கொடுத்தார். மருமகள் வீட்டிற்கு வந்ததும் தங்கம்மாளுக்கு என்னமோ ஒரு சனியன் வீட்டிற்கு வந்தாப்போல் உள்ளம் வெதும்பிற்று, அவள் மனம் படாதபாடுபட்டது, மருமகளை ஒரு பார்வை விரைத்துப் பார்த்தாள். நெற்றிக் கண்ணிருந்தால் கற்பகவல்லி எரிந்தே போயிருப்பாள். கற்பகவல்லி கற்பே வடிவாக வந்தவள். கணவனைக் கடவுளாக எண்ணுபவள். மாமியைத் தாய்ப்போல் கருதி வணங்குவாள். கணவனுடன் பிறந்த கோமதியை உடன்பிறந்தாரைப்போல உபசரிப்பாள். சீதேவியே வந்து உலாவுவதைப்போல் விளங்கினாள். அவளுடைய நற்குணங்களைக் கண்டு தாணுமாலயன் உள்ளம் உவந்தான். ஆனால் கோமதிக்கு அவளைக் காணும்போதெல்லாம் வயிற்றில் நெருப்பையள்ளிப்போட்டதுபோல் இருக்கும். கற்பகவல்லி அன்புடன் பேச வரும்போதெல்லாம் கோமதி சீறி விழுவாள்.

தங்கம்மாள் என் வீட்டிற்கு ஒரு மூதேவி வந்து சேர்ந்தாள் என் குடும்பத்திற்கே அழிவுக்காலம் வந்துவிட்டது. இவள் என்று தொலைவாளோ? இவள் ஒரு பெரிய மாயக்கள்ளி. கண்ணிலேயே அவனை மயக்கி சொக்குபொடி தூவி விட்டாள். அந்த அசட்டுப் பையன் இவளை ஒரு பேய் என்று தெரிந்துக்கொள்ளாமல் மயங்கிக் கிடக்கின்றான். இவள் வந்த பிறகு என் மருமகன் என் மகளோடு விளையாடுவதற்கு சந்தர்ப்பமில்லாமல் போய்விட்டது இவள் கண்ணீர்விட்டழப் பார்த்து மகிழ்வது என்றோ? " என்று பற்பலவாறு பிதற்றிக்கொண்டிருந்தாள்.

கற்பகவல்லி மாமி செய்யும் கொடுமைகளைப் பொருள்படுத்தாமல் அவளிடம் மேன்மேலும் அன்பு பாராட்டியும், மாமியின் உபத்ரவத்தைக் கணவனிடம் கூறாமலும், மிகவும் பொறுமையாக மலர்ந்த முகத்துடன் இல்வாழ்க்கையை நடத்திவந்தாள். கற்பகவல்லி பெருங்குடியிற் பிறந்தவள். செல்வாக்காக வளர்ந்தவள். மாமி வீட்டிற்கு வந்தபின் எல்லா வேலையும் அவள்தான் செய்ய வேண்டிய கஷ்டம் ஏற்பட்டுவிட்டது. மாமியின் சேலை, கோமதியின் சேலை, கோமதியின் கணவன் கட்டியவிழ்த்த வேஷ்டிகள் யாவையும் பாவம் கற்பகவல்லிதான் தோய்க்கவேண்டும். அத்துணை வேலை செய்தும் அவள் மாமி அவளை வையாமல் விடுவதில்லை.

தங்கம்மாள் மனம் கற்பகவல்லியைக் காணுந்தோறும் திகுதிகு என்று எரிந்துக்கொண்டேயிருந்தது. "இவள் வாழ்வை அடியோடு தொலைப்பதற்கு என்ன வழி" என்று யோசித்துக்கொண்டேயிருந்தாள். முடிவில் அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. "தன் மகனைக் கொன்றுவிட்டால், கற்பகவல்லி விதந்துவாகி நாதனற்று விடுவாள்; அவளைத் தாய் வீட்டிற்கு விரட்டிவிடலாம். பிறகு எல்லா சொத்தும் சுதந்தரமும் மருமகனுடையதாகிவிடும். மகளுக்கு எல்லாம் உரிமையாகிப் பெருவாழ்வில் வாழ்வாள்". "மகனிறந்தாலுமிறக்கட்டும் மருமகள் விதந்துவானால் சரி" என்று துணிந்தனள், என்னே அவளுடைய நெஞ்சின் துணிவு; கல்லினும் வன்னெஞ்சு. பிறகு விஷத்தைச் சம்பாதித்து வைத்தாள். அன்று மாலை தாணுமாலயன் ஆபீசிலிருந்து வீட்டிற்கு வந்தான். மனைவி கணவனுக்கு தேநீர் கொடுத்து உபசரித்தாள். அவன் தனது மனைவியை நோக்கி "பெண்ணே! நின் முகம் ஏன் பொலிவழிந்திருக்கின்றது" என்று கேட்டான். கற்பகவல்லி "பிராணேச! தங்கள் அருகிலிருந்து பேசவும், தங்களுடன் உறவாடி இன்புறவும் இல்லாத எனது துர்ப்பாக்கியத்தை நினைந்து நெஞ்சம் புண்ணுகின்றது. எனக்கு மலையத்தனை துன்பம் நேரினும் அதனை அணுவாக நினைப்பேன், தங்களுடன் மகிழ்ந்திருக்கும் பெரும்பேறு ஒன்றே எனக்கு வேண்டுவது", என்று சொல்லி கண்ணீர் விடுத்தாள். அதே சமயம் தங்கம்மாள் அங்கு வந்து சேர்ந்தாள். 200 தாடகை ஒருங்கு கூடினாற்போற் கர்ஜித்து, அடி சண்டாளி! புருஷனிடத்தில் என்னடி துர்போதனை செய்கின்றாய். என் குடியைக் கெடுக்கவந்த சூர்ப்பநகையே! நன்றாகத் தின்றுவிட்டுப் பெருச்சாளியைப்போல் கொழுத்த உனக்கு என்ன கவலை வந்து



விட்டது. உன்னைச் சொல்லி பயனில்லை. உனக்கு இடங்கொடுத்து உன்னை தலைமேல் ஏற்றிவைத்துக்கொண்டிருக்கும் இந்த மடையனைச் சொல்ல வேண்டும். கேடுகெட்ட சிறுக்கியை சரிசமானமாக வைத்துக்கொண்டு பேசுகின்றானே இவனை ஒரு ஆண் பிள்ளை "முட்டாளே! ஏண்டா உனக்கு இப்படி புத்திகெட்டுவிட்டது. தடிமாடே! பெண்மாயத்தில் சிக்கிய பேதையே!" என்று சகஸ்ரநாம அர்ச்சனை செய்ய ஆரம்பித்துவிட்டாள். தாணுமாலயன் பெரிய மானி; "அம்மா! நீ ஏன் இப்படி கதறுகின்றாய். அவள் ஒன்றும் என்னிடம் துர்ப்போதனை செய்யவில்லை. வீணே இப்படி வீண்பழி சுமத்துகின்றனை; வேண்டாம் அண்டை அயல் கேட்டால் சிரிப்பதற்குத் தாம்பூலந் தராதே." என்று வெகு நிதானமாயும் அமைதியாயும் கூறினான்.

பிறகு இரவு மணி 10 ஆயிற்று. மருமகனும் மகளும், உண்டுவிட்டு மேல்மாடியில் உல்லாசமாகப் போய்ப் படுத்துக்கொண்டார்கள். தாணுமாலயன் உணவு செய்யாமலேயே மிகுந்த விசனத்துடன் ஒரு அறையிற் போய் படுத்துக்கொண்டான். தங்கம்மாள் தான் தயாரித்த விஷத்தைப் பாலிற் கலந்து "அடி கற்பகவல்லி! இந்தா இந்தப் பாலைக்கொண்டுபோய் உன் கணவனுக்குக் கொடு' என்றாள். கற்பகவல்லி, மிகுந்த மகிழ்ச்சியுடன் அதனை வாங்கிக்கொண்டுபோய் கணவனிடந் தந்தாள். தாணுமாலயன் மனவேதனையால் அதனை உட்கொள்ளாமல் வாங்கி கூடத்து மாடத்தில் வைத்துவிட்டான். பிறகு கற்பகவல்லி போய் தன் படுக்கையிற் படுத்தாள். தங்கம்மாள் "இன்றோடு சனியன் தொலைந்தது. அவன் இறந்தபின் நாளையே இவளை விரட்டிவிட வேண்டும். நம் கண்மணி மகளும் மாப்பிள்ளையும் உல்லாசமாக இருப்பார்கள்" என்று மனக்கோட்டை கட்டினாள்,

மனித இச்சைப்படி என்றும் நடவாதல்லவா? இறைவன் கட்டளைப்படிதானே எல்லாம் நடக்கும் நடு இரவில் தங்கம்மாளின் மருமகன் நீர் விடாய்கொண்டு, மாடியை விட்டுக் கீழே இறங்கி தண்ணீர் பருகவந்தான். தமளர் ஒன்றும் கிடைக்கவில்லை. மாடத்தில் இருந்த தமளரை எடுத்தான். அதில் பால் இருக்கக் கண்டான், தனக்காக வைத்திருந்ததை கொடுக்க மறந்துவிட்டார்கள்போலும் என்று எண்ணி அதை எடுத்துக் குடித்துவிட்டு மேல் மாடியிற்போய் படுத்து விழிக்காப் பேருறக்கம் கொண்டான்.

பொழுது விடிந்தது. தங்கம்மாள் மிகுந்த சந்தோஷத்தோடு எழுந்து தன் மருமகள் அழுவதைக் கண்டு கண் குளிர வேண்டுமென்று எண்ணி மகன் படுத்திருக்கும் அறைக்குப் போனுள். தாணுமாலயன் எழுந்து திருவாசகம் படித்துக் கொண்டிருந்தான். தங்கம்மாள் திகைத்துப்போனுள், மாடியில் படுத்திருந்த கோமதி எழுந்து தன் அருகில் பிணமாகக்கிடக்கும் கணவனைக்கண்டு அலறி அழுதாள். மகளின் அழுகுரலைக் கேட்ட தங்கம்மாள் திடுக்கிட்டாள். மேல் மாடியில் போய் பார்த்தாள்; மருமகன் பிணமாயிருக்கக்கண்டாள். மருமகள் அழுவதற்குப்பதிலாக மகள் அழுவதைக் கண்டு துடிதுடித்தாள். "அந்தோ! என்பொருமை என்னையே கெடுத்துவிட்டதே; நானென்றுநினைக்கத் தெய்வம் ஒன்றுநினைத்து விட்டதே! என் மகளுடைய வாழ்வுக்கு நானே முடிவு தேடிவிட்டேனே; என் கெட்ட எண்ணம் என்னை அடியோடு கெடுத்து விட்டதே. என்ன செய்வேன்? அந்தோ! உத்தமகுணம் பொருந்திய மருமகளுக்குத் தீங்கு செய்யப்போய் அது என்மகள் தலையில் வந்து விழுந்ததே, "என்று வாய் விட்டுப் புலம்பினுள். அவள் வாயிலிருந்து புறப்பட்ட சொற்களால் சூழ்ச்சியைத் தாணுமாலயன் உணர்ந்தான். தன்தாயின் கெடுமதியை எண்ணி புண்பட்டான். பிறகு மகளுந்தாயும் இருக்குமிடந்தெரியாது அடங்கி தங்கள் வஞ்சகத்தை எண்ணி மனங்குழம்பி கண்ணீரால் நனைந்துகொண்டிருந்தார்கள். கற்பகவல்லி தன் கற்பின் பெருமையால் தீர்க்க மங்கல்யம் பெற்று, மாமிக்கும் நாத்திக்கும் வேண்டிய உபசாரம் செய்துகொண்டு கணவனுடன் எல்லா நலங்களும் பெற்று இன்பவாழ்வில் இனிது வாழ்வாளாயினுள்.

---

எதுகைப் பழமொழிகள்

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

47. வாயிதம் பெரியது ஆயுதம் சிறியது.
48. வாய்ச்சொல் வீரன் காரியச் சோரன்.
49. வெகுநாள் கற்கும் வித்தை யுள்நிற்கும்.
50. வெள்ளி விதைபிடி வியாழன் கதிர்பிடி.



உ

ஓம் குஹாய நம:

  

# ஸ்ரீ அருணகிரி நாதர் அவதார வைபவம்.

செந்தமிழ்த் தீஞ்சுவை மிக்க திருப்புகழ்த் திருமறையை உலகெலா முய்ய திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளுடைய அவதாரநாளைக் கொண்டாடுவது முருகனருளைப் பெறுதற்கு முதன்மையானதாம்.

ஆதலால் அடியிற்கண்ட இடங்களிலெல்லாம் இவ்வரிய பெரிய விழா கொண்டாடப் பெறுகின்றது.

அவதார நாள்:— சித்திரபானுஹு ஆனிமீ 14 உ

காங்கேயநல்லூர்:— ஸ்ரீமான் மல்லையதாஸ்பாகவதர் அவர்களால் முருகர்கோயிலில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பெறும்.

வயலூர்:— தாராநல்லூர், திரு சோமசுந்தரம்பிள்ளை யவர்கள், திரு. அ. வேலுபிள்ளையவர்கள், நாச்சிகுறிச்சிதிரு. துரைசாமி நாடார் அவர்களால் சாலவும் சிறப்பாகக் கொண்டாடப் பெறும்.

மோகனூர்:— காந்தமலையில் அன்பர்கள் முயற்சியால் மிகவும் சிறந்த முறையில் கொண்டாடப் பெறும்.

ஸ்ரீமத் மாரியப்ப சுவாமிகள், இன்னிசையரங்கும், நடைபெறும்.

திருநெல்வேலி:— திருப்புகழ் சபையாரால் குறுக்குத்துறை கோயிலில் இனிது கொண்டாடப்பெறும்.

மதுரை:— திருப்புகழ் சபையாரால் தெற்கு ஆவணிமூலவீதி திருப்புகழ் சபையில் உயர்ந்த முறையில் கொண்டாடப்பெறும்.

உ

முருகா



## வடலூர் திருப்பணி.

வடலூர் சத்தியஞானத் திருச்சபைத் திருப்பணி நடைபெற்றுவருவது உலகறிந்த ஒன்று.

அதற்கு நாகையில் யாம் விரிவுரை நிகழ்த்தியபோது நாகை வெளிப்பாளையம் தருமகுணசீலர் உயர்திரு,

S. N. பச்சமுத்துநாடார் அவர்கள் மனமுவந்து 1001 ஆயிரத்தொரு ரூபாய் வழங்கினார்கள். இப்புண்ய சீலருடைய பெருமையும் அன்பின் அருமையும், உள்ளத்தின் ஒருமையும் மிகவும் பாராட்டற்பாலது. இத்தகைய வள்ளலுக்கு எந்தை கந்தவேள் திருவருள் துணைசெய்வதாக. அன்பர் நீடுவாழ்க.

அன்பன்

திருபாலகுமாரி

